आननाम्भोज सञ्चारि रम्य स्मितश्वेतहंसाहि-
ताण्ड भ्रमादायि सन्मौक्तिका भूषिता वक्र-
नासाशुकह्रीप्रदे, श्रीप्रदे ।

ஆனனும்போஜ ஸஞ்சாரி ரம்ய ஸ்மித ச்வேத ஹம்ஸாஹிதாகண்ட ப்ரமாதாயீ ஸன்மௌக்திகா பூஷிதா வக்ரநாஸா சுகஹ்ரீப்ரதே ஸ்ரீப்ரதே

முககமலத்தில் சஞ்சரிக்கும் புன்னகை என்னும் அன்னப்பறவையின் முட்டையோ என எண்ணத்தை உண்டாக்கும் முத்தால் அலங்கரிக்கப்பட்டதும் சிறிது வளைந்த நுனியுடையதுமான மூக்கிஞல் கிளியை வெட்க மடையச் செய்கின்றவளே, செல்வம் அளிப்பவளே.

बालताम्बूलिका चर्वणाद्यन्त रक्ताधराभा
पराभूत बिम्बेऽम्बिके मौक्तिक श्रेणिका तुल्य
दन्तावले दन्तिवक्त्रात्मजे ।

பாலதாம்பூலிகா சர்வணுத்யந்த ரக்தாதராபா பராபூத பிம்பே அம்பிகே மௌக்திக ச்ரேணிகா துல்ய தந்தாவளே, தந்திவக்த்ராத்மஜே.

இளம் வெற்றிலே உண்டதால் மிகவும் சிவந்த உதட்டினுல் கோவைக்கனியை வென்றவளே, முத்து வரிசையொத்த பற்களை உடையவளே, யானை முகத் தோனை ஈன்றவளே,

सृष्ट नानाविध प्राणिलीला विलोकोद्भवन्मन्द-हासाय तौष्टान्त भागावटेनान्विते, सर्वसंमानिते, स्वस्तनानामिते ।

ஸ்ருஷ்ட நாணுவித ப்ராணிலீலா விலோகோத்-பவன் மந்தஹாஸாய தௌஷ்டாந்த பாகா-வடேனான்விதே, ஸர்வஸம்மானிதே, ஸ்வஸ்த-நாணுமிதே.

தன்னுல் படைக்கப்பட்ட பலவித ஜீவராசிகளின் லீலையைப் பார்க்கும்போது தோன்றும் புன்னகையால் விரிந்த உதடுகளின் ஓரத்தில் தோன்றும் சிறு குழி உடையவளே, எல்லோராலும் மதிக்கப்பெற்றவளே, தனது ஸ்தனங்களால் சிறிது குனிந்தவளே,

रेखिका भूषितानङ्ग शङ्खोपमा धारि कण्ठोज्ज्वलद्रम्यभूषा प्रभावर्जिते, शान्तरङ्गे कुरङ्गेक्षणे लोक संरक्षणे दीक्षिते ।

ரேகிகா பூஷிதானங்க சங்கோபமாதாரி கண்டோஜ்வலத்ரம்ய பூஷா ப்ரபாவர்ஜிதே, சாந்தரங்கே, குரங்கேக்ஷணே லோக ஸம்ரக்ஷணே தீக்ஷிதே.

ரேகைகளால் விளங்கும் மன்மதன் சங்கிற்கு இணையான கழுத்தில் விளங்கும் ரத்னாபரணங்களுடைய ஒளியினால் சிவனது உள்ளத்தைக் கவர்ந்தவளே, மான்விழியாளே, உலகைக் காப்பதென வ்ரதம் பூண்டவளே,

हाटका भूषण व्रात भारातिकानम्र रम्यांसभास्फुरच्छ्वेत कौशेय विस्रंसन व्यग्रपाणेनमच्चक्रपाणेऽम्बिके ।

ஹாடகா பூஷணவ்ராத பாராதிகாநம்ர ரம்யாம்ஸபாக ஸ்புரத் ச்வேத கௌசேய விஸ்ரம்ஸன வ்யக்ரபாணே, நமச்சக்ரபாணே அம்பிகே.

பொன்னணிகளின் பாரத்தால் மிகவும் தாழ்ந்த தோளில் விளங்குகின்ற வெண்பட்டாடை அடிக்கடி நழுவ அதைச் சரியான இடத்தில் வைக்க முயற்சிகொண்ட கைகளை உடையவளே, தாயே, நாராயணனாலும் வணங்கப்பட்டவளே.

दिग्जय व्यग्र मारध्वजाकार हस्ताग्र भागोल्ल-सत्पाश दिव्यांकुशे, भीतिहारि प्रपुल्लाब्जपाणे, दयास्राविनेत्राम्बुजे ।

திக்ஜய வ்யக்ர மாரத்வஜாகார ஹஸ்தாக்ர பாகோல்லஸத்பாச திவ்யாங்குசே, பீதிஹாரி ப்ரபுல்லாப்ஜபாணே தயாஸ்ராவி நேத்ராம்புஜே

திசைகளை வெல்ல எண்ணிய மன்மதனுடைய த்வஜத்தை யொத்த கைகளின் நுனியில் விளங்கும் பாசத்தையும் அங்குசத்தையும் உடையவளே, அபயம் அளிக்கும் திருக்கரம் உடையவளே, தயவைப்பொழியும் விழிகளைக் கொண்டவளே,

मत्त मातङ्ग कुम्भोपमोत्तुङ्ग पीन स्तनस्थापि-तानेक रत्नाञ्चिताभूषण ज्योतिषा शक्र चाप द्युति तन्वता वक्षसा शोभिते ।

மத்தமாதங்க கும்போபமோத்துங்க பீனஸ்தந-ஸ்தாபிதாநேக ரத்னாஞ்சிதாபூஷணஜ்யோதிஷா சக்ர சாபத்யுதிம் தன்வதா வக்ஷஸா சோபிதே.

மதங்கொண்ட யானையின் மத்தகத்தையொத்து உயர்ந்து பருத்த மார்பகத்தில் அணியப்பட்ட பல ரத்னமாலைகளின் ஒளியால் வானவில்லின் ஒளியைப் பரவவிடும் மார்பினுல் விளங்குகின்றவளே.

तुङ्गवक्षोज शैलद्वयाभ्यन्तरान्नाभि कूपावधि
व्याप्त रम्येन्द्र नीलाध्वधीदायिनीं रोमरेखां
वहन्त्यम्बिके भासि कारुण्य कल्लोलिते ।

துங்க வக்ஷோஜ சைல த்வயாப்யந்தரான் நாபி கூபாவதி வ்யாப்த ரம்யேந்த்ர நீலாத்வதீ தாயினீம் ரோமரேகாம் வஹந்த்யம்பிகே பாஸி காருண்ய கல்லோலிதே.

உயர்ந்த மலையையொத்த ஸ்தனங்களின் மத்தியிலிருந்து நாபி கூபம் வரை நீண்டு சென்றதும், இந்திரநீலக் கற்களால் அமைந்துள்ளதுமான பாதையோ என ஐயமூட்டும் ரோம ரேகையுடையவளே, கருணை அலை கொண்ட கடலே.

नाभिका वापिका हेम सोपान शोभायुताभि-
र्वलीभिर्युते, स्वायुधे, क्षोणमध्ये, शुभे, पापिनां
दुर्लभे, शूलिनो वल्लभे ।

நாபிகா வாடிகா ஹேமஸோபான சோபாயுதா-
பிர்வலீபிர்யுதே, ஸ்வாயுதே, க்ஷீணமத்யே,
சுபே, பாபினும் துர்லபே, சூலினோ வல்லபே.

நாபி தடாகத்தின் பொற்படிகளின் ஒளியைக்கொண்ட மும்மடிப்பைக் கொண்டவளே. நல்ல ஆயுதங்களை ஏந்தியவளே, இளைத்த இடையுடையவளே, நன்மை செய்பவளே, பாபிகளால் காணமுடியாதவளே, சிவனுக்கு ப்ரியமான தாயே.

पञ्च बाणप्रिया खेलनायोपक्लृप्ताचलद्वन्द्व भासा
नितम्बस्थलेनान्विते कुक्षिमध्यस्थ लोके,
सुलोकप्रदे, सम्मते, सन्मते ।

பஞ்ச பாணப்ரியா கேலனுயோபக்லுப்தா சல-
த்வந்த்வபாஸா நிதம்பஸ்தலேனுன்விதே, குக்ஷி
மத்யஸ்தலோகே, ஸுலோகப்ரதே, ஸம்மதே,
ஸன்மதே.

இரதிதேவியின் விளையாட்டிற்காக அமைக்கப்பட்ட குன்றையொத்த நிதம்பஸ்தலத்துடன் கூடியவளே, வயிற்றில் விளங்கும் உலகங்களை உடையவளே, மதிப்பு உடையவளே, ஸாதுக்களால் பூஜிக்கப்பட்டவளே.

वज्रवैडूर्यं माणिक्य गोमेदकादि प्रभा मिश्रणा-
ल्लोचनासेचनीं हेम काञ्चीं वहन्ती चलन्ती
मनो मोदिनी: किङ्किणीनादयस्युत्तमे सत्तमे ।

வஜ்ர வைடூர்ய மாணிக்ய கோமேதகாதி ப்ரபா மிச்ரணுல்லோசனு ஸேசனீம் ஹேமகாஞ்சீம் வஹந்தீ சலந்தீ மனேமோதினீ, கிங்கிணீ நாதயஸ்யுத்தமே, ஸத்தமே.

வைரம், வைடூர்யம், கோமேதகம், மாணிக்கம் முதலிய இரத்தினங்களுடைய ஒளிச் சேர்க்கையால் கண்களைக் கவரும் பொன்னிடையணியை அணிந்து நீ நடக்கும் பொழுது மனதைக் கவரும் அவ்வணியின் சதங்கை நாதம் எழும்புகின்றது. சிறப்புற்ற தாயே, உத்தமியே.

जङ्घिका निर्जितानङ्ग हेमेषुधे, वासुदेवानते,
वामदेवाहृते वामभागस्थिते, सद्गते ।

ஜங்கிகா நிர்ஜிதாநங்க ஹேமேஷுதே, வாஸுதேவாநதே, வாமதேவாத்ருதே, வாமபாக ஸ்திதே, ஸத்கதே.

முழங்கால்களின் அழகினுல் மன்மதனுடைய அம்புப் பெட்டியை வென்றவளே, வாஸுதேவனுல் வணங்கப் பட்டவளே, சிவனுல் ஆதரிக்கப்பட்டவளே, சிவனது இடது பாகம் பெற்றவளே, நல்லோரைக் காப்பவளே.

नूपुरालंकृतालक्तकारक्त रक्ताब्ज शोभायुतांघ्रि-
द्वयानम्र देवाङ्गनाकेश भारच्युतामोदि पुष्पोच्च-
याच्छन्न पादासने हेमसिह्मासने ।

நூபுராலங்க்ருதாலக்தகாரக்த ரக்தாப்ஜசோபா-
யுதாங்க்ரித்வயாநம்ர தேவாங்கனு கேசபாரச்யு-
தாமோதி புஷ்போச்சயாச்சன்ன பாதாஸனே
ஹேமஸிம்ஹாஸனே.

நூபுரங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளும், செம்பஞ்சுக் குழம்பால் சென்னிறங்கொண்டவைகளும், செந்தாமரை மலரையொத்தவைகளுமான திருவடிகளில் தேவமாதர் வணங்கும்பொழுது அவர்கள் தலைகளில் சூடிய மலர் களால் மறைக்கப்பட்ட பாதாஸனத்தையுடைய்வளே, பொன்னுஸனத்தில் அமர்ந்தவளே,

चारु वीणानिनादेन वाण्या मुहुर्गीयमाने रमा-
पाणि सम्योजिताभूषणे, देवराजप्रियाक्लृप्त-
वेणी मनोहारिणीशप्रिये, सुक्रिये ।

சாருவீணு நிஞதேன வாண்யா முஹுர்கீய-
மானே ரமாபாணி ஸம்யோஜிதா பூஷணே,
தேவராஜப்ரியாக்லுப்த வேணீ மஞேஹாரிணீச
ப்ரியே, ஸுக்ரியே.

இனிய வீஞகானத்தைக்கொண்டு கலேமகளால் அடிக்கடி புகழப்படுகின்றவளே. இலக்குமியின் திருக்கரங்களால் அணிவிக்கப்பட்ட அணிகளேயுடையவளே, தேவராஜன் மனேவியால் பின்னப்பட்ட சடையின் அழகிஞல் விளங்குகின்றவளே, சிவனுக்குப் பிரியமானவளே, நற்செய்கையுடைய தாயே.

मेनकाद्यङ्गना नर्तनालोकना कम्पिताब्जानने,
ऊर्वशी गीतमाधुर्य कृष्टान्तरङ्गे, तुरङ्गाननेन
स्तुते, रङ्गराजाग्रजे, हैमशैलात्मजे ।

மேனகாத்யங்கஞ நர்த்தஞ லோகஞ கம்பி-
தாப்ஜானனே, ஊர்வசீ கீதமாதுர்ய க்ருஷ்டாந்
தரங்கே, துரங்கானனேனஸ்துதே, ரங்கராஜா-
க்ரஜே, ஹைமசைலாத்மஜே.

மேனகை முதலிய பெண்கள் நடனமாடும்பொழுது அவர்கள் நடனத்தை மெச்ச தாமரைபோன்ற முகத்தை அசைப்பவளே, ஊர்வசியின் கீதங்களின் இனிமையால் இழுக்கப்பட்ட உள்ளம் உடையவளே, ஹயக்ரீவரால் துதிக்கப்பட்டவளே, ரங்கநாதனுடைய ஸஹோதரியே, பனிமலையின் மகளே.

पादसेवागतामर्त्य रामा समूहादि सम्मर्दन क्रुद्धचेटी जनाश्वासन व्यग्रपाण्यम्बुजेऽनङ्ग जेतृप्रिये, चिन्मये ।

பாதஸேவாகதாமர்த்ய ராமாஸமூஹாதி ஸம்-மர்தன க்ருத்த சேடீ ஜனாச்வாஸன வ்யக்ர பாண்யம்புஜே அனங்கஜேத்ருப்ரியே, சின்மயே

திருவடிகளைச் சேவிக்க ஒருவரை ஒருவர் மோதிக் கொள்ளும் தேவப்பெண்களின்மீது கோபங்கொண்ட பணிப்பெண்ணை அமைதியுடன் இருக்கச்செய்யும் கர கமலமுடையவளே, காமாரியின் அன்பைப்பெற்றவளே, சின்மயமானவளே.

यः स्मरेत्त्वामुमे सर्वभूषान्वितां स्वर्णसिंहास-नोद्भासिनीं सोचिराच्छ्रीप्रसादात् कुबेरोपमा जायते ।

ய: ஸ்மரேத் த்வாமுமே ஸர்வ பூஷாந்விதாம்
ஸ்வர்ண ஸிம்ஹாஸனோத்பாஸினீம் ஸோசிராத்
ஸ்ரீப்ரஸாதாத் குபேரோபமா ஜாயதே.

எவன் உன்னை, எல்லா அணிகளையும் பூண்டவளாய்ப் பொன்மயமான சிங்காஸனத்தில் அமர்ந்தவளாகத் தியானிக்கின்றானோ அவன் விரைவில் இலக்குமியின் அருள்கொண்டு குபேரனுக்கு நிகராக விளங்குவான்.

येन संस्मर्यसे दिव्य पाशांकुशा कालपाशाद्भयं
तस्य न स्यान्महादेवि देवानते ।

யேன ஸம்ஸ்மர்யஸே திவ்ய பாசாங்குசா கால
பாசாத் பயம் தஸ்ய ந ஸ்யான் மகாதேவி
தேவானதே.

எவன் உன்னை பாசாங்குசதாரிணியாக த்யானம் செய்கின்றானோ அவனுக்கு யமனுடைய பாசத்திலிருந்து அச்சம் உண்டாவதில்லை. மஹாதேவி, தேவர்களால் வணங்கப்பட்டவளே.

ध्यायति त्वां जगन्मातरं यस्सदा सर्व सौख्या-
न्वितस्सोन्ततस्स्वर्गवासी भवेत् त्वत्प्रसादात्
शिवे

த்யாயதி த்வாம் ஜகன்மாதரம் யஸ்ஸதா ஸர்வ-ஸௌக்யாந்விதஸ் ஸோ ந் த த ஸ் ஸ்வர்க்கவாஸீ பவேத் த்வத்ப்ரஸாதாச்சிவே.

உலக மாதாவாக உன்னை எவன் த்யானிக்கின்ருனே அவன் ஸகல ஸௌபாக்யங்களையும் அனுப-வித்து முடிவில் ஸ்வர்க்க ஸுகத்தை உன்னருளால் அனிபவிக்கிருன்.

यन्त्रमध्यस्थितां भावयन्मन्त्रपूर्वं जनो यो अर्चयत्याशु तस्यारयो भस्मतां यान्त्यनङ्गारि-जायेऽलये सर्वविद्यालये ।

யந்த்ர மத்யஸ்திதாம் பாவயன் மந்திரபூர்வம் ஜனோ யோர்ச்சயத்யாசு தஸ்யாரயோ பஸ்மதாம் யாந்த்ய-னங்காரி ஜாயேடலயே ஸர்வவித்யாலயே

அழிவற்ற தாயே, சிவனது உளத்தைக் கவர்ந்தவளே, கலைகளுக்கெல்லாம் இடமானவளே, உன்னை எவன் மந்திரமோதி, யந்திரத்தின் மத்தியில் ஸ்தாபனம் செய்து பூஜிக்கின்ருனே, அவனது எதிரிகள் விரைவில் அழிவுகொள்கின்றனர்.

त्वत्प्रभावं महान्तं नरो वर्णयन् वाक्पतित्वं तदैवाप्नुते दुर्लभं दुर्लभे भक्तिहीनस्य लोकाम्बिके ।

த்வத்ப்ரபாவம் மஹாந்தம் நரோ வர்ணயன் வாக்பதித்வம் ததைவாப்னுதே துர்லபம் துர்லபே பக்தி-ஹீனஸ்ய லோகாம்பிகே

உலக மாதாவே, உனது அளவிட முடியாத பெருமையை வர்ணிப்பவன் உடனே சொற்களுக்கு அதிபனான தேவகுருவிற்குச் சமமாகிறான். உன்னை பக்தியற்றவர் காண முடியாது.

योगिहृन्मानसे हंसिका राजसे ।

யோகிஹ்ருன்மானஸே ஹம்ஸிகா ராஜஸே.

யோகிகளின் உளமெனும் மானஸஸரஸ்ஸிற்கு அன்னம்போல் விளங்குகிறாய்.

भोगिनां सर्वदा सर्वदा भ्राजसे ।

போகினும் ஸர்வதா ஸர்வதா ப்ராஜஸே.

இல்வாழ்வில் ஈடுபட்டவர்களுக்கு நீ என்றும் எதையும் அளிக்கின்றாய்.

वेदसा छन्दसा सन्ततं गीयसे ।

வேதஸா சந்தஸா ஸந்ததம் கீயஸே.

ப்ரம்மாவால் இடைவிடாது வேத மந்த்ரங்களைக் கொண்டு புகழப்படுகின்றாய்.

साधुभिर्दैत्य संमर्दिनी स्तूयसे ।

ஸாதுபிர்தைத்ய ஸம்மர்த்தினீ ஸ்தூயஸே.

நல்லோர்கள் உன்னை அஸுரர்களை அழித்த உத்தமி எனப் புகழ்கின்றனர்.

सत्यरूपे सदा नित्यरूपेऽनघे ।

ஸத்யரூபே ஸதா நித்யரூபே஽னகே

எப்பொழுதும் உண்மையுருவானவள், நீ அழிவற்றவள், குற்றமற்றவள்.

नुत्यरूपेऽम्बिके निर्जराराधिते चिन्मयानन्ददे चित्सभेशप्रिये ।

நுத்யருபேம்பிகே நிர்ஜராராதிதெ சின்மயானந்ததே சித்சபேசப்ரியே.

புகழத்தக்க உருவமுடையவளே, தேவர்களால் போற்றப்பட்டவளே, சின்மயமாயும் ஆனந்தம் தர வல்லவளாயும் உள்ளவளே, சித்சபேசன் உளங் கவர்ந்த தாயே.

• देवि तुभ्यं नमो देवि तुभ्यं नमो देवि तुभ्यं नमः ॥

தேவி துப்யம் நமோ தேவி துப்யம் நமோ தேவி துப்யம் நமః

தேவி உனக்கு வணக்கம், வணக்கம், வணக்கம்.



# ❀ श्री भुवनेश्वरि नवरत्नमालिका ❀

# ஸ்ரீ புவனேச்வரி நவரத்னமாலிகா

कलाधर कुटुम्बिनीं कलुषनाशिनीमम्बिकां
कलानिधि समाननां कनकवर्ण कायान्विताम् ।
विनायक गुहान्वितां विविध भूषणाभूषितां
नमामि भुवनेश्वरीं नतजनावनैक व्रताम् ॥

கலாதர குடும்பினீம் கலுஷ நாசினீமம்பிகாம்
கலாநிதி ஸமானனும் கனகவர்ண காயான்விதாம்.
விநாயக குஹான்விதாம் விவித பூஷணுபூஷிதாம்
நமாமி புவனேச்வரீம் நதஜனுவனைக வ்ரதாம்.

சிவபிரானது மனைவியும், பாவத்தையழிப்பவளும், மதியொத்தமுகமுடையவளும், பொன்னிறங்கொண்ட உடலுடையவளும், விநாயகர், முருகன் இவர்களுடன் கூடியவளும், பலவகை அணிகளைப் பூண்டவளும், அடிபணிந்தோரைக் காப்பதையே வ்ரதமாகக் கொண்டவளுமான புவனேச்வரி அம்மையை வணங்குகிறேன்.

कारुण्यरस कल्लोलां
अरुणारुण रम्यपाद पाथोजाम् ।
गुरुणा पूजित पादां
वन्दे भुवनेश्वरीं महादेवीम् ॥ १

காருண்யரஸ கல்லோலாம்
அருணாருண ரம்யபாத பாதோஜாம்,
குருணா பூஜித பாதாம்
வந்தே புவனேச்வரீம் மஹாதேவீம்.

கருணை மிகுந்தவளும், மிகச் சிவந்து அழகு நிறைந்த திருவடித் தாமரைகளைக் கொண்டவளும், குருவினால் பூஜிக்கப்பட்ட திருவடிகளை யுடையவளும், மஹாதேவி யுமான புவனேச்வரி அன்னையை வணங்குகிறேன்.

सुलभां सुरजन वन्द्यां
सुमुखीं सुखदां सुवर्णमणिभूषाम् ।
सुमनो भूषित केशां
कलये भुवनेश्वरीं सदा देवीम् ॥ २

ஸுலபாம் ஸுரஜன வந்த்யாம்
ஸுமுகீம் ஸுகதாம் ஸுவர்ணமணிபூஷாம்.
ஸுமனோ பூஷித கேசாம்
கலயே புவனேச்வரீம் ஸதா தேவீம்.

எளிதில் அருள் தருகின்றவளும், தேவர்களால் போற்றப்படுகின்றவளும், அழகிய முகமுடையவளும், இன்பமளிப்பவளும், பொன்னணிகளையும் இரத்தின அணிகளையும் அணிந்தவளும், நன்மலர்களால் அலங்கரிக்கப்பட்ட கேசங்களை உடையவளுமான புவனேச்வரி அம்மையை எப்பொழுதும் த்யானிக்கின்றேன்.

अम्बामागमवेद्यां
आराध्यामाश्रितावने व्यग्राम् ।
आर्यामहार्य शौर्यां
आश्रय भुवनेश्वरीं दयाम्भोधिम् ॥ ३

அம்பாமாகம வேத்யாம்
ஆராத்யா மாச்ரிதாவனே வ்யக்ராம்,
ஆர்யா மஹார்ய சௌர்யாம்
ஆச்ரய புவனேச்வரீம் தயாம்போதிம்.

மறை முதலியவைகளால் அறியத்தக்கவளும், பூஜிக்கத்தக்கவளும், அடியார்களைக் காப்பதில் ஈடு பாடுடையவளும், அழியாத வீரமுடையவளும், கருணைக் கடலுமான புவனேச்வரி அன்னையை வணங்குவாயாக.

कामितवरदां कान्तां
काञ्चनपीठां कपालि चित्तहराम् ।
कलिकल्मष नाशकरीं
कालीं भुवनेश्वरीं भजे देवीम् ॥ ४

காமிதவரதாம் காந்தாம்
காஞ்சனபீடாம் கபாலி சித்தஹராம்,
கலிகல்மஷ நாசகரீம்
காளீம் புவனேச்வரீம் பஜே தேவீம்.

விரும்பிய வரங்களைக் கொடுப்பவளும், அழகு நிறைந்தவளும், பொன்னாசனமுடையவளும், சிவனது உள்ளத்தைக் கவர்ந்தவளும், கலியின் பாவத்தை நீக்கு கின்றவளும், காளியின் உருவத்தை ஏற்றவளும், தேவி யுமான புவனேச்வரித்தாயை வணங்குகின்றேன்.

अभयद पाणिसरोजां
अद्भुतचरितां महत्तरोरोजाम् ।
यतिवर विरचितपूजां
देवीं भुवनेश्वरीं भजे गौरीम् ॥ ५

அபயத பாணிஸரோஜாம்
அத்புத சரிதாம் மஹத்தரோரோஜாம்,
யதிவர விரசித பூஜாம்
தேவீம் புவனேச்வரீம் பஜே கௌரீம்.

அபயமளிக்கும் கரகமலமுடையவளும், அற்புதமான சரித்திரமுடையவளும், பருத்த மார்பகமுள்ளவளும், சிறந்த யதிகளால் பூஜிக்கப்பட்டவளும், வெண்ணிற முடையவளுமான புவனேச்வரி தேவியை வணங்குகின்றேன்.

अगणितगुणगणनिलया
विद्रावित भक्तलोक चित्तभया ।
दर्शित निजपूर्णदया
ध्रियते भुवनेश्वरीं हृदाद्य मया ॥ ६

அகணித குணகண நிலயா
வித்ராவித பக்தலோக சித்தபயா,
தர்சித நிஜ பூர்ணதயா
த்ரியதே புவனேச்வரீ ஹ்ருதாத்ய மயா.

அளவிடமுடியாதச் சிறப்புகளுக்கு இடமானவளும் அடியார்களின் அச்சத்தை நீக்குகின்றவளும், பரிபூர்ணமான அருளைக் காட்டுகின்றவளுமான புவனேச்வரி அன்னையை உள்ளத்தால் நான் தியானிக்கிறேன்.

असिततर केशभारा
वक्षोविलसन्महार्घ मणिहारा ।
सन्तत करुणापूरा
भातां भुवनेश्वरी कृपाधारा ॥ ७

அஸிததர கேசபாரா
வக்ஷோவிலஸன்மஹார்க மணிஹாரா,
ஸந்தத கருணாபூரா
பாதாம் புவனேச்வரீ க்ருபாதாரா.

கருங்கூந்தல்களைக் கொண்டவளும், மார்பில் விளங்கும் விலை உயர்ந்த மணிஹாரங்களைக் கொண்டவளும்,

இடைவிடாது கருணைப் பெருக்குகின்றவளும், கருணைக்கு இடமானவளுமான புவனேச்வரி என் உள்ளத்தில் விளங்கவேண்டும்.

शान्तां शङ्करकान्तां
चरणानत पालनैक सिद्धान्ताम् ।
नाशित हृदयध्वान्तां
वन्दे भुवनेश्वरीमुदारान्ताम् ॥ ८

சாந்தாம் சங்கர காந்தாம்
சரணாநத பாலனைக ஸித்தாந்தாம்,
நாசித ஹ்ருதய த்வாந்தாம்
வந்தே புவனேச்வரீ முதாராந்தாம்.

அமைதியுடையவளும், சங்கரன்மனைவியும், அடியார்களைக் காப்பதையே முக்கியமாகக் கொண்டவளும், உள் இருளை அழிப்பவளும், உதாரகுணம் நிறைந்தவளுமான புவனேச்வரி அன்னையை வணங்குகின்றேன்.

शान्तानन्द यतीश
स्थापित देवालयास्थितां देवीम् ।
नवसालपुरी निलयां
वन्दे भुवनेश्वरीं जगज्जननीम् ॥ १

சாந்தானந்த யதீச
ஸ்தாபித தேவாலயாஸ்திதாம் தேவீம்,
நவஸாலபுரீ நிலயாம்
வந்தே புவனேச்வரீம் ஜகஜ்ஜனனீம்.

ஸ்ரீ சாந்தானந்த யதீந்திரரால் கட்டுவிக்கப்பட்ட தேவாலயத்தில் குடிகொண்டவளும், புதுக்கோட்டையில் விளங்குகின்றவளும், உலகைப் படைத்தவளுமான ஸ்ரீ புவனேச்வரியை வணங்குகின்றேன்.



## फलश्रुति

## பலச்ருதி

नवरत्नमालिकैषा

पठिता भक्त्यान्वहं जगन्मातुः ।

शमयति सद्यः किल्बिष-

मष्टैश्वर्यं प्रमोदमपि तनुते ॥

நவரத்ன மாலிகைஷா

படிதா பக்த்யான்வஹம் ஜகன்மாது:,

சமயதி ஸத்ய: கில்பிஷ-

மஷ்டைச்வர்ய ப்ரமோதமபி தனுதே.

புவனேச்வரித் தாயின் நவரத்னமாலே என்ற இத்துதியை பக்தியுடன் தினந்தோறும் படித்தால் ஸகல பாபங்களும் நீங்கும். அஷ்ட ஐச்வர்ய சுகமும் ஏற்படும்.

ஓம் தத்ஸத்



## ॥ नमस्काराः ॥
## நமஸ்காரங்கள்

या देवी सर्वभूतेषु विष्णुमायेति शब्दिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥
யா தேவீ ஸர்வபூதேஷு விஷ்ணுமாயேதி சப்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु चेतनेत्यभिधीयते ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥
யா தேவீ ஸர்வபூதேஷு சேதனேத்யபிதீயதே,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु बुद्धिरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥
யா தேவீ ஸர்வபூதேஷு புத்திருபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु निद्रारूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥
யா தேவீ ஸர்வபூதேஷு நித்ராருபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु क्षुधारूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ।।

யா தேவீ ஸர்வபூதேஷு க்ஷுதாரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु छायारूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ।।

யா தேவீ ஸர்வபூதேஷு ச்சாயாரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु शक्तिरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ।।

யா தேவீ ஸர்வபூதேஷு சக்திரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु तृष्णारूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ।।

யா தேவீ ஸர்வபூதேஷு த்ருஷ்ணாரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु क्षान्तिरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥

யா தேவீ ஸர்வபூதேஷு க்ஷாந்திரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம:.

या देवी सर्वभूतेषु जातिरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥

யா தேவீ ஸர்வபூதேஷு ஜாதிரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம:.

या देवी सर्वभूतेषु लज्जारूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥

யா தேவீ ஸர்வபூதேஷு லஜ்ஜாரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம:.

या देवी सर्वभूतेषु शान्तिरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥

யா தேவீ ஸர்வபூதேஷு சாந்திரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:.

या देवी सर्वभूतेषु श्रद्धारूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥
யா தேவீ ஸர்வபூதேஷு ச்ரத்தாரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु कान्तिरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥
யா தேவீ ஸர்வபூதேஷு காந்திரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु लक्ष्मीरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥
யா தேவீ ஸர்வபூதேஷு லக்ஷ்மீரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु वृत्तिरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥
யா தேவீ ஸர்வபூதேஷு வ்ருத்திரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

या देवी सर्वभूतेषु स्मृतिरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥

யா தேவீ ஸர்வபூதேஷு ஸ்ம்ருதிரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:.

या देवी सर्वभूतेषु दयारूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥

யா தேவீ ஸர்வபூதேஷு தயாரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:.

या देवी सर्वभूतेषु तुष्टिरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥

யா தேவீ ஸர்வபூதேஷு துஷ்டிரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:.

या देवी सर्वभूतेषु मातृरूपेण संस्थिता ।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥

யா தேவீ ஸர்வபூதேஷு மாத்ருரூபேண ஸம்ஸ்திதா,
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

---

ௐ

# புவனேசுவரி அக்ஷரமாலை

புவனேச்வரி புவனேச்வரி
புவனேச்வரி புவனேச்வரி
அவனி தழைக்க வந்த புவனேச்வரி
ஆதிஜோதியே புவனேச்வரி
இன்புறுவானவளே புவனேச்வரி
ஈசன் இணைந்திருக்கும் புவனேச்வரி
உள்ளத்தமர்ந்தருளும் புவனேச்வரி
ஊக்கம் அளித்திடுவாய் புவனேச்வரி
எங்கும் நிறைந்திலங்கும் புவனேச்வரி
ஏகாக்ஷரியே புவனேச்வரி
ஐயம் தவிர்த்திடுவாய் புவனேச்வரி
ஐச்வர்யம் அனைத்தும் தரும் புவனேசவரி
ஒட்யாண பீடத்தமர் புவனேச்வரி
ஓங்காரத்துட்பொருளே புவனேச்வரி
ஔபநிடதம் துதிக்கும் புவனேச்வரி
அப்பன் ரெங்கதாஸன் பணியும் புவனேச்வரி

உ

# புவனேசுவரி துதி



அளிகுலம் மொய்த்திடு நீண்ட சடையணி
　கொண்டு விளங்கு முகத்தவளே
கிளிமொழியோய் மதி பதி யெனும் திரு
　நெற்றி மயக்கிடுமீசனையும்
தளிரினுமெல்லிய நின்னடி யெம்துணை
　யென்று பணிந்திடுவோமுனையே
குளிர்நிறை கண்மலரா லருள் செய்திட
　வந்திடுவாய் புவனேசுவரி　　1

இதழொளி சேர்ந்திட வெண்ணிறம் மாறிய
　முத்தணிபூண்ட முகத்தவளே
சதமென வாழ்வை நினைந்து மறந்த குறைதனை
　நீ மறந்தருளிடுவாய்
மதநிலைகொண்டு நிமிர்ந்த நிலையிலுனை
　நினையாது விடுத்தனன் யான்
பதமலரைப் பணிவேன் சுகவாழ்வு கொடுத்
　தருள்வாய் புவனேசுவரி.　　2

முக கமலத்திடை பூத்த மனோகர வாம்பலெனும்
விழி கொண்டவளே
இகபரவின்ப மளித்தடியார் துயர் தீர்ப்பவளே
இணையற்றவளே
தகதக வென்றொளி வீசிடு காதணி பூண்டவளே
யுலகாண்டவளே
புகலவொணாப் புகழோய் வினை தீர்த்திட
வந்தருள்வாய் புவனேசுவரி. 3

உதடெனும் செங்கனி உண்டிட வந்த
பசுங்கிளி மூக்கெனும் மூக்குடையாய்
சுதை நிகர் சொல்லுடையோய் சுரர் சென்னி
வணங்கி மிகத்துதி செய்திடுவாய்
நிதமுனையே நினைவோர் நிதி யொன்பது
வந்திட நன்னிலை கொண்டிடுவார்
குதலை மொழிச்சுவை நீயறிவாய்
குணவாரிதியே புவனேசுவரி. 4

நறுமண முல்லையரும்பெனும் பல் வரிசை
யுடையோய் நவையற்றவளே
முறுவலினாற்புர மூன்று மெரித்தவன் நாயகி
மாயமிலா தவளே

குறுமுனி போற்றிய தாளுடையோய்குல
மங்கைகள் சூழ விளங்கிடுவாய்
உறுதுணையற்று தவிப்பவனுக் கருள்
செய்திடுவாய் புவனேசுவரி. 5

சிறிது சிவந்த பளிங்கென மின்னு கபோல
தலத்தொளி கொண்டவளே
அறியவொண வலிமையை யுரைத்திட
முன் வருமோ மறையம்பிகையே
கறிநிறை யாக்கை சுமந்து திரிந்து வினை பல
செய்தனன் யாது பயன்
பொறி வழியேகிய பாதகனுக்கருள்
செய்திடுவாய் புவனேசுவரி. 6

இருபுருவங்களனங்கன் கரத்திடை வில்
லினை வென்ற வெண்ணகையோய்
திருவருளில்லை யெனில் ககனந்தனில்
சூரியன் சந்திரன் தோன்றிடுமோ
கருமுகில், மின்னிடுமீனனல் வாயு தரை பணி
செய்திடுமோ உலகில்
சரும வுடல் சதமில்லை யறிந்தனன் சோதனை
யேன் புவனேசுவரி. 7

மறை புகழ் நாரணன் சங்கினை வென்றது
நின் கழுத்தீசன் மனோகரியே,
பிறைமதி சூடிய நாயகன் பாதியுடல்கொள
நற்றவமேற்றவளே,
நிறைமதியொத்த முகத்தவளே நினைவேன்
தினமும் திருமெல்லடியை
குறைகள் மறந்தருள் தந்திடுவாய் குறை
யற்றவளே புவனேசுவரி. 8

பலவித நன்மலர் மாலைகளுக்கழ
கீந்திடு மார்பகமுள்ளவளே,
புலவர் புகழ்ந்திடும் பூரணியே புவனம்
நிலைகொண்டிடவைப்பவளே,
குலமகளே குணவாரிதியே,
குகனுக்கருள்செய்த தயாபரியே
நிலமகள் போற்றிடும் நிர்மல ரூபிணி
காத்திடுவாய் புவனேசுவரி. 9

பசுநிறவேய் நிகரான புயங்கள் வனப்பை
யுரைத்திட வல்லவர்யார்
திசையதிபர்கள் துதிக்குமுயர் புகழ்கொண்ட
திகம்பரன் நாயகியே

கசை கரமேந்திய காலபடர் வருவேளை
யிலென்னுளமாடிடுமே
இசையுருவேயெனைக் காத்திட வந்திடு
சங்கரியே புவனேசிவரி. 10

புயமெனு மெல்லிய தாமரைத் தண்டினில்
பூத்த பயோருகமொத்த கரம்
பயமதை நீக்கிடும் பாரத மக்கள்
பணிந்திடும் பார்வதியம்பிகையே
கயல்விழியோய் கவலைகளகன்றிடக்
கண்ணருள் செய்திட வந்திடுவாய்
முயலகனை யடிகொண்டு மிதித்தவன்
நாயகியே புவனேசுவரி. 11

கரிமுகனும் கதிர்வேலவனும் சுவையாத
தனங்களிரண்டுடையோய்
பிரியவொணு து பிறைமதி சூடிய
நாதனுடல் தனைப்பெற்றவளே
கிரியரசின் மகளே, கனிவாய்மொழியால்
அருள் செய்திடத் தாமதமேன்
விரிகடல் சூழுலகம் சுகமெய்திட
வந்தவளே புவனேசுவரி. 12

வடதருபத்திர மொத்த வயிற்றிடை வைத்து
சகத்தை வளர்ப்பவளே
குடமுனிபோற்றிய கன்னிகையே
குரு நாதனையீந்த குணக்கடலே
நடமிடு மண்ணலுளங்கவருத்தம ரூபிணி
நித்திய தத்துவமே
சடவுடல் தீயமுன் வந்தருள் தந்திடு
தாயனையோய் புவனேசுவரி. 13

அணுவிலு நுண்ணிய நின்னிடை கண்டிட
வல்லவனல்ல சிவே சிவனும்
மணமுறு மல்லிகை முல்லை முதல் மலர்
மாலையணிந்த மகேசுவரி
கணபதியன்னை களித்த முகத்தவ ளென்று
கழல்கள் பணிந்திடுவோம்
உணவு கொடுத்தருளும் பரதேவதை
யுத்தமியே புவனேசுவரி. 14

நவமணியாடக பூஷண கிங்கிணி
நாதமெழுப்ப நடப்பவளே
தவமுனிவர்க்கருள் செய்பவளே
தருமப்பயிர் ஓங்கிட வைப்பவளே

உவமையிலாதவளே யுமையே
உலகிற்கொரு தாயெனு முத்தமியே
கவலையகன்று களிப்புற நின்
கழலேத்துகிறேன் புவனேசுவரி 15.

இரவினிலே ஒளிகின்றிடும்அம்புயமுன்
கழலுக்கிணையாகிடுமோ
சுரவனிதைகள் வணங்க மணிக்கிரணங்கள்
பதங்களில் வீசிடுமே
அரனுமுனைப்பெற நற்றவமேற்றனனுன்
பெருமை புகலற்கரிதாம்
முரனரி சோதரி முத்தியளித்திட
வந்திடுவாய் புவனேசுவரி. 16.

கதிதரும் அம்பிகையின் துதியை
தினமன்புததும்பிட வோதியவர்
சதிபதி வாழ்வு சுகத்தரவுத்தம
புத்திரர் தோன்ற சுகம் பெறுவார்
விதிவிலகப் பதிகொண்டு விளங்குவர்
கண்ணியர் கண்ணிய மாயுலகில்
மதிவளரும் புகழோங்கிடுமம்பிகை
தண்ணருளாலிதிலையமில்லை. 17

ஓம்

# ஸ்ரீ புவனேச்வரி கவசம்



## த்யானம்

அங்குச பாச மேந்தி அபயமே வரதம் தாங்கும்
பங்கயக் கரத்தள் பீதாம்பரமணி யிடையள் பொற்பூண்
பைங்கள நிரம்பப் பூண்டாள் பதினாறு கலையெழுத்துள்
பொங்கிய ஓரெழுத்தாள் புவனேசி பாதம் போற்றி.

கணபதியே சரணம் கணநாதா ரக்ஷிப்பாய்
கந்தனுக்கு மூத்தோனே கவசத்தை தந்திடுவாய்
மாதாவின் கவசத்தை மங்களம் பெருகிடவே
மங்கள கணபதியே மகிழ்ந்தெனக் கருள்வீரே.

பஞ்சமுக கணபதியே மனமாசறுத்துத் தேசருளி
வல்லபை கணபதியே வல்வினைகளைப் போக்கி
மஹத்தான உன்னருளை மாரிபோல் பொழிந்திட்டு
பூலோகம் உய்வுபெற புவனேசி கவசமீவாய்.

புவனேச்வரித் தாயே புவனமெல்லா முய்வுபெற
புண்ணியத்தால் உன்நாமம் போற்றுகிறேன்
கேட்டிடம்மா
என் ஹ்ருதயத் துள்ளிருந்து என்னறி வாகியேநீ
சீர்மிக்க மாதாவே சீக்கிரமே வந்திடம்மா.

பாக்கியம் பலவேண்டி பகர்கின்றேன் கவசத்தை
பாலாம்பிகைத் தாயே பரிவுடனே வந்திடம்மா
படைப்புக்கும் முன்புள்ள பராசக்தித்தாயே கேள்
பாலன் இவனையுமே பார்த்து ரக்ஷிப்பாய்.

மூவர்கள் போற்றி ஏத்தும் முதல்வியே புவனேசி
தேவாதி தேவர்களும் தேவியுன்னை வழிபட்டே
சாகாவரம் பெற்று சர்வசக்தி எனப் புகழும்
லலிதாம்பிகைத் தாயே சடுதியில் வந்திடம்மா.

மார்க்கண்ட மாமுனிவர் மஹான் துர்வாஸரிஷி
அகஸ்தியரிஷி போன்றோர் அன்னையுன்னை வழிபட்டே
இன்றும் இருந்துகொண்டு இவ்வுலகிற் கருளுவதை
என்னவென்று நானுரைப்பேன் என்தாயே உன்மஹிமை

வாராஹி தேவியே வந்திப்பேன் உன் அடியை
பாதம் நகம் விரலை பார்வையால் நீ காத்திடம்மா
முழுங்கால் இரண்டையுமே மலைமகளே காத்திடம்மா
தொடைகள் இரண்டையுமே துர்க்கை நீ காத்திடம்மா

பின்புறத்தை நாரஸிம்மி பிறழாது காத்திடம்மா
வயிற்றை பைரவியே வலியவந்து காத்திடம்மா
மார்பை சிவதூதி மாண்புடனே காத்திடம்மா
வலதிடது தோளை வைஷ்ணவியே காத்திடம்மா

மனோன்மணித்தாயே என் மார்பையுமே ரக்ஷிப்பாய்
மஹாத்ரிபுர சுந்தரி நீ மனத்தையும் காத்திடம்மா
என் ஹ்ருதயத்தில் புவனேசி நீஇருந்து ரக்ஷிப்பாய்
கழுத்தை மாஹேந்திரியும் முகத்தை காத்யாயனியும்

தலையைத் தாக்ஷாயணியும் தலைக்குள் சிவசக்தித்தாயும்
கண் காது வாய் மூக்கை காமாக்ஷியும் காத்திடம்மா
பற்களனைத்தையுமே பத்மாக்ஷி காத்திடம்மா
நாக்கை வாக்தேவி நயமுடன் காத்திடம்மா.

புருவங்க ளிரண்டையுமே பூதேவி காத்திடம்மா
புருவங்களின் நடுவில் ஸ்ரீதேவி யிருந்து காப்பாய்
கண்ணொளி யாயிருந்து காப்பாய் காமேச்வரித்தாயே
கண்களின் மணிகளையே காலஹந்த்ரி காப்பாய் நீ.

கண்ணிமையைக் காத்திடம்மா காத்யாயனித்தாயே
அங்கங்க ளனைத்தையுமே ஆதிசக்திகாத்திடம்மா
என்னை நீ ரக்ஷிப்பாய் என்தாயே ரக்ஷிப்பாய்
பூரணி பூமியிலும் மேலே பவானித்தாயும்.

திக்குகள் தோறுமே திருபுராம்பா காத்தருள்வாய்
மேல்கீழ் குறுக்கெல்லாம் மூகாம்பா ரக்ஷிப்பாய்
காத்திடம்மா காயத்ரீ கண்ணிமைபோல் காத்திடம்மா
வாராஹி கௌமாரி நாரஸிம்மி ரக்ஷிப்பாய்.

சண்டிகை சக்தி கௌரி சங்கடங்கள் தீர்த்திடுவாய்
அஷ்டலக்ஷ்மித் தாயே அமர்ந்திடம்மா என்னுடனே
பிரியா திருந்திடம்மா ப்ரத்யக்ஷ மாகிடம்மா
புவனேச்வரித் தாயே புவனமெல்லாம் நிறைந்தவளே.

புவனேசி என்ருலே புண்ணியம் பெருகிடுமே
புண்ணிய புருஷர்கள் புவனேசி திருநாமம்
போற்றிடுவர் போற்றியுமே புண்ணியத்தைப்
பெருக்கிடுவர்
திருவடியும் பற்றிடுவர் திருநாமம் ஜெபித்திடுவர்.

நாமத்தின் மஹிமையினுல் நமனையும் வென்றிடுவர்
ஸகல ஸெளபாக்யமும் ஸாயுஜ்ய முக்தியுமே
தந்திடுவாள் புவனேசி தரித்திரத்தை ஓட்டிடுவள்
சாந்தியின் வடிவுகொண்ட ஸர்வேசி நமஸ்காரம்.

சிரத்தை வடிவான ஸ்ரீமாதா நமஸ்காரம்
சாந்தியின் வடிவான காமாக்ஷி நமஸ்காரம்.
லக்ஷ்மியின் வடிவான லலிதாம்பா நமஸ்காரம்
விருத்தியின் வடிவான விருத்தாம்பா நமஸ்காரம்

ஸ்மிருதியின் வடிவான ஸ்கந்தமாதா நமஸ்காரம்
தயையின் வடிவான தர்மாம்பா நமஸ்காரம்
துஷ்டியின் வடிவான துக்கஹந்த்ரீ நமஸ்காரம்
மாத்ரு வடிவான மஹாதேவி நமஸ்காரம்.

மயக்க மகற்றிடுவாய் மாஹேசி நமஸ்காரம்
தேவியே புவனேசி தினமுன்னை நமஸ்கரிப்பேன்
தீராத வியாதிகளைத் தீர்த்து நீ ரக்ஷிப்பாய்
அகந்தையை ஒழித்திடுவாய் அம்மா புவனேசி,

பிறவிப்பிணி தீர்ப்பாய் பிரம்மசக்தித் தாயே கேள்
என் துன்பத்தைத் துடைத்திடவே தீப துர்கையாய்
வந்திடம்மா

துர்காம்பிகைத் தாயே துரிதத்தை விலக்கிடம்மா
அட்டமா ஸித்திகளை அடியேனுக் கருளிடம்மா.

மாகாளியாய் வந்து மனமாயையை ஒழித்திடம்மா
சாமுண்டீச்வரியே ஸம்சயத்தை போக்கிடம்மா
காளிகா தேவியே காத்திடம்மா என்னையும் நீ
வாராஹியாய் வந்து வழியில் காத்தருள்வாய்.

இந்திராணித்தாயே இம்மையில் நீ ரக்ஷிப்பாய்
வைஷ்ணவி மாதாவாய் வந்து வரமருள்வாய்
கௌமாரித் தாயே நீ காத்திடம்மா உள்ளிருந்து
ப்ரஹதம்பிகைத் தாயே பிரமையையும் போக்கிடுவாய்.

துன்பம் துயரத்தைத் துடைத்துக் காப்பாற்றிடவே
காமக் குரோதத்தைக் கலக்கி விரட்டிடவே
சத்ருவாம் பகைவனையும் சம்சய அரக்கனையும்
துஷ்டர்களை விரட்டிடவே வனதுர்கா வந்திடம்மா.

பத்து திக்கிலுமே் பத்ரகாளீ காத்திடம்மா
மாதா பாலாம்பிகையே மாயையைப் போக்கிடம்மா
சும்ப நிசும்பனைப் போல் அகந்தையை அழித்திடம்மா
ஸிம்ம வாஹனத்தில் ஜய துர்கே வந்திடம்மா.

ஜகத் ஜனனி ஜகன்மாதா ஜய புவனேசித்தாயே
மமதையில் மயங்காமல் மாதங்கி காத்திடுவாய்
அனைத்தையும் கொடுக்கும் அன்னபூர்ணேச்வரியே
குறையற்ற கல்வியைக் கொடுத்திடுவாய் கலைவாணி.

மஹிஷாசுரனையும் மற்றுமுள்ள தூம்ரனையும்
சண்டனையும் முண்டனையும் ரத்தபீஜாசுரனையும்
அகம்பாவ அசுரர்களை அழித்தவம்மே ஸ்கந்தமாதா
சாமுண்டீச்வரியே சந்தோஷமெனக்கருள.

சக்தியாய் வந்திடம்மா புவனும்பிகைத் தாயே
சத்துச்சித்தில் வடிவான ஸித்தேச்வரித் தாயே
ஜயந்தி மங்களா காளி ஜய ஜய போற்றி போற்றி
பத்ரகாளி கபாலினியே பராபரே போற்றி போற்றி.

பூரண புராதனியே புவனேசி போற்றி போற்றி
அகிலாண்டேச்வரியே அன்னையே போற்றி போற்றி
ஆதி பராசக்தியான ஆசோபனு போற்றி
கள்ளம் கபடம் நீக்கும் காமாக்ஷியே போற்றி

கருணைக் கடலான வம்மே காத்யாயனியே போற்றி
ஆயிரம் நாமமுள்ள ஆதி புவனேசி போற்றி
சாந்தி சுகம் தருவாய் ஷண்முகன் தாயே போற்றி
ஹயக்ரீவர் போற்றி ஏத்தும் ஆதி லலிதா போற்றி

சிரத்தா பக்திதரும் சிவகாமி போற்றி போற்றி
கலிதோஷம கற்றுவிப்பாய் கல்யாணி போற்றி போற்றி
ஏகாக்ஷரம் தருவாய் வேதவேத்யா போற்றி போற்றி
ஈசனுள் குடியிருக்கும் புவனேசி போற்றி போற்றி

லக்ஷ்மி வாணி போற்றும் லலிதாம்பா போற்றி போற்றி
ஹ்ரீங்கார ரூபமான புவனமாதா போற்றி போற்றி
ஹரிப்ரம்மேந்திரர்கள் அகத்துள்ளோய் போற்றி போற்றி
ஸர்வேசி ஸாக்ஷிரூபே ஸர்வக்ஞே போற்றி போற்றி

ககாரார்த்தா கபாலினி காலஹந்த்ரி போற்றி போற்றி
ஹம்ஸ மந்த்ர மயமான ஹம்ஸவதி போற்றி போற்றி
லகாராக்யா லதா பூஜ்யா ராஜேச்வரி போற்றி போற்றி
ஹ்ரீம் மத்யா ஓங்காரி ஜகன்மாதா போற்றி போற்றி

ஸநகாதி முநித்யேயே ஸச்சிதானந்தே போற்றி போற்றி
கல்யாணீ காதவித்யே கமலாக்ஷி போற்றி போற்றி
லகாரிணீ லப்தரூபே லப்தசக்தே போற்றி போற்றி
ஹ்ரீங்கார மூர்த்தித் தாயே புவனேசி போற்றி போற்றி

பஞ்ச தசாக்ஷரித்தாயே பவநாசினி போற்றி
ஸ்ரீமாதா ஸ்ரீமஹாராக்ஞீ சீருடனே வந்திடம்மா
ஸிம்ஹாஸனேச்வரியே சீக்கிரமே வந்திடம்மா
சிதக்னிகுண்ட ஸம்பூதா சித்ரூபி வந்திடம்மா

ஸர்வாபரண பூஷிதையே ஸர்வேசி வந்திடம்மா
சிவாயெனப் பெயர்கொண்ட சிந்தாமணி வந்திடம்மா
மங்களத்தைச் செய்திடம்மா மாதா புவனேச்வரியே
ப்ரும்ம விஷ்ணு ருத்ரன் ஈசானன் நால்வருடன்

ஸதாசிவனையுமே பீடமாக்கிக்கொண்ட சிவே
ஐவரான மஞ்சத்தில் அமர்ந்து ஜோதியானவளே
கதம்பவனவாஸினியே காமகோடி வரமருள்வாய்
சாக்தப் பிரணவத்தை சடுதியில் தந்திட்டு

கல்மஷங்களைப் போக்கி கலிதோஷ மகற்றிடுவாய்
நகக்கண் வழியாக நாரணனை சிருஷ்டித்தோய்
ஹரிஹர ப்ரம்மாக்கள் அனன்யமாய்த் தொழுதேத்தும்
தேவர்களும் முக்தர்களும் தினமும் தொழுதேத்தும்

ஸித்தர்களும் பக்தர்களும் ஜன்மமெல்லாம் தொழுதேத்தும்
புவனேச்வரித்தாயே போதுமம்மா இப்பிறவி
மறுபிறவி இனிவேண்டாம் மாதா புவனேச்வரியே
பிறவிப்பயன் தந்த புவனேசித் தாயே கேள்

பற்றினேன் திருவடியை பற்றறுப்பாய் புவனேசி
புவனேசி யுன்னுமம் பிணியறுக்கும் திருநாமம்
என்றுணர்ந்தேன் உன்னருளால் என்தாயே புவனேசி
மூலமந்த்ராத்மிகையே முக்தியும் தந்திடம்மா

பக்தனுக்கு வசமாகும் பார்வதியே வந்திடம்மா
பயத்தைப் போக்கிவிடும் பரதெய்வமே வருவாய்
நிர்மலா நித்யா நிராகுலா வந்திடுவாய்
மோஹநாசினீ தாயே மோகத்தைப் போக்கடிப்பாய்

பாபநாசினி மாயே பாபத்தைப் போக்கிடுவாய்
கோபத்தைப் போக்கடிக்கும் க்ரோத சமனித்தாயே
உலோபித்தன மகற்றும் லோபநாசினியே கேள்
சந்தேக மகற்றுவிக்கும் ஸம்சயக்னீ கேட்டிடம்மா

பாபநாசினி மாயே பந்தத்தைப் போக்கிடம்மா
பேதபுத்தியை யகற்றும் பேதநாசினியே கேள்
மரணபய மகற்றிடுவாய் ம்ருத்யுமதனீ தாயே
சுகத்தைத் தந்தருளும் சுகப்ரதா சுகமருள்வாய்

துராசாரத்தை யோட்டும் துராசாரசமனீ கேள்
ஸர்வேச்வரீ ஸர்வமயீ ஸர்வ மந்த்ரஸ்வரூபிணியே
மாஹேச்வரீ மஹாதேவி மஹாலக்ஷ்மீ சுந்தரியே
மஹாரூபே மஹாபூஜ்யே மஹாபாதக நாசினியே

பானுமண்டல மத்யஸ்தே பைரவி பகமாலினியே
பத்மாஸனே பகவதி பத்மநாப ஸகோதரியே

புருஷார்த்த ப்ரதே பூர்ணே போகினி புவனேச்வரியே
தத்வாஸனே தத்வமயீ தத்துவத்தை உணர்த்திடுவாய்
குமார கணநாதாம்பா அகங்காரமகற்றிடுவாய்
ராஜ ராஜேச்வரித் தாயே ராஜ்ய லக்ஷ்மீ வரமருள்வாய்

ஸச்சிதாநந்தரூபிணியே ஸதாநந்தம் தந்திடுவாய்
ஸ்ரீசக்ர ராஜநிலயே ஸ்ரீமத் த்ரிபுர சுந்தரியே
ஸ்ரீலலிதாம்பிகைத் தாயே சீக்கிரமே வரமருள்வாய்
வரமருள்வாய் வரமருள்வாய் வந்திப்பேன் புவனேசி

புவனேசி திருவடியை புண்ணியத்தால் பற்றிவிட்டேன்
சிக்கெனப் பற்றிவிட்டேன் புவனேசி வுன்னடியை
பற்றெல்லாம் அறுத்திடுவாய் பராசக்தி புவனேசி
பிறந்து பிறந்திளைத்தேன் பிறவாவரமருள்வாய்

துன்பமெலாம் விலக்கி துரீயத் திருத்திடுவாய்
ஞான வைராக்கியமும் நான்மறை ரகசியமும்
ஆகம புராணத்தின் அகத்துள்ள ரகசியமும்
வேதாந்த ரகசியமும் விளக்கிடுவாய் புவனேசி

பிறவிப்பிணி யகற்றி பிரம்மமய மாக்கிடம்மா
எல்லாம் சிவமெனவே எனக்கு நீ யருளிடுவாய்
நெஞ்சத்துள் நீ யிருந்து நித்ய முக்தனாக்கிடம்மா
அல்லும் பகலும் அடியேனிவன் உன்னை யன்றி

மற்றோர் நினைவின்றி மஹராஜி போற்றுகிறேன்
போற்றுகிறேன் போற்றுகிறேன் புவனேசி
பொன்னடியை
தலைமேலாம் தளத்தில் தந்திடம்மா தரிசனமும்
தரிசனம் தந்திட்டு தரித்திரத்தை ஒழித்திடம்மா

உள்ளத்துள்ளே யிருந்து உண்மையினை யுணர்த்திடம்மா
திரிபுர சுந்தரித்தாயே தீர்த்திடுவாய் வினைகளையும்
நான் உன்னை விடமாட்டேன் நவின்றுடுவாய் உபதேசம்
ஹ்ரீங்காரம் தந்துதாயே என்னில் உனைக்காட்டி

உன்னில் எனைக்காட்டி உய்விப்பாய் என்னையும் நீ
ஆத்ம சக்தி யாயிருந்து அன்புடன் ரக்ஷிப்பாய்
அறம் பொருள் இன்பத்தை அம்மே கொடுத்திடுவாய்
வீட்டையும் தந்திட்டு விதியெல்லாம் விரட்டிடுவாய்

பேரின்ப வீடருளிப் பிறவாவரம் தந்து
ப்ரம்மானந்தத்தோடு பிரியாதிருந்திடச் செய்
திடம் பெறவே உன்னை நானென்றுணர்ந்திடச்செய்
புவனத்தைப் பொய்யென்று புவனேசிகாட்டிடம்மா

விருப்பு வெறுப்பற்று என்னை இருத்திடுவாய்
நிராசையான வீட்டில் என்னையும் நீ நிறுத்திடம்மா
உள்ளும் புறமும் உன்னையே காட்டிடம்மா
காணும் காக்ஷியெல்லாம் காந்திமதி நீ என்றும்

ஓசை ஒளியெல்லாம் உமாதேவி தானென்றும்
ஸ்தாவர ஜங்கமமெலாம் ஜகத்தாத்ரீ நீயென்றும்
புவனேசி உணர்த்திடுவாய் புனிதனாக மாற்றிடுவாய்
என்னையுமே காத்திடுவாய் என்னம்மே புவனேசி

நின்று மிருந்துமே நின்னுமம் ஏத்திடுவேன்
நடந்தும் கிடந்துமே நானுன்னைப் போற்றிடுவேன்
இமைப்பொழுதும் உன்நாமம் மறந்திடமாட்டேன் நான்
என் நினைவெல்லாம் நீயாக நின்றிடுவாய் புவனேசி

என் உணவெல்லாம் உனக்கேற்ற நைவேத்ய மாகுமம்மா
நான் நடப்பதே பிரதக்ஷிணமாய் நம்பிவிட்டேன்
தாயே கேள்
என் உடலாட்டமெல்லாம் உனக்கருளும் முத்திரையாம்
என் உயிருக்கும் உயிரான ஆத்மசக்தி நீயன்ரோ

அங்கிங்கெனுதபடி எங்கும் சக்தி மயம்
அழகிலும் அன்பிலும் அறிவிலும் சக்திமயம்
அனைத்தும் பராசக்தி அணுக்களெல்லாம் சக்திமயம்
சக்தியில்லாத தெய்வம் சவமென் றுணர்ந்திடடா

தெய்வங்களுக்குள்ளே தேவி யிருப்பதாலே
சக்தியுள்ள தெய்வமென்று சடுதியில் சொல்கிருர்
ஹரிஹரப்ரம்மாவும் அன்புள்ள தேவர்களும்
ரிஷிகளும் ஞானிகளும் ஸித்தர்களும்

சக்தியைத் தொழுவதாலே சர்வ சக்தியும் பெற்ருர்
புவனேசி மாதாவை முழுமனத்தோடு நீயும்
அகத்துள் துதித்தேத்தி அன்புடன் சரணடைந்து
இடைவிடாது உனதகத்துள் இக்கணமே இருத்தி

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் என்று உறுதியாக ஏத்தியும் நீ
மலைபோல் இருந்திட்டால் மஹத்துவம் புலப்படும்
தன்னில் புவனசக்தி தரிசனம் காணலாமே
உன்னில் புவனசக்தி ஒன்றையே கண்டிடலாம்

புவனமெல்லாம் புவனசக்தி புலப்படுமுன்னுள்ளே
அகமும் புறமும் ஆதிசக்தி காண்பதற்கு
அன்னை புவனேச்வரியை அகத்துள் இருத்திடடா
அன்னை புவனேச்வரியை அகத்துள் இருத்துவோர்க்கு.

அழகெலாம் சக்தியாகும் அன்பெலாம் சக்தியாகும்
அறிவெலாம் சக்தியாகும் அனைத்துமே சக்தியாகும்
சத்தியம் சக்தியாகும் ஞானமும் சக்தியாகும்
சாந்தம் ஆனந்தம் சக்தியாய்த் தோன்றிவிடும்

ஆனந்தம் வேண்டி நீயும் ஆதிசக்தி புவனையையும்
அன்புடன் பற்றிடடா அன்னை அருள் கிட்டிடுமே
பகுத்தறிவுள்ள நீயும் பற்றிடடா புவனையையும்
அனைவ ருள்ளிருக்கும் ஆன்மா புவனேசி

அதுவே நானென்று அகத்துள் உணர்ந்திடலாம்
அழிவிலாச் சக்தி ஆன்ம சக்தியாய்

அகத்துள்ளே உண்மையாய் ஆன்மாவாய் இருப்பதை.
இம்மையில் உணர்ந்து நான் இன்புற்றிருப்பதற்கு
அமைதியாய் வாழ்வதற்கு அருள்வாய் வரமெல்லாம்
அருட்குலத்தாயே ஆன்ம சக்தியே

அற்புதமாய் நான் வாழ அடியனுக்கருள்வதுடன்
அம்மையே ஆன்மா அதுவே நானும்
அதுவே நீயும் அனைத்தும் அதுவென்று நீ உணர்த்து
மனமே! அம்மையின் உருவம் அன்பென்பர் ஞானிகள்

ஸித்தர்கள் அன்பையே எனதம்மை யென்பர்
அன்பின்றி உலகில் வளமில்லை மறவாதே
பார்க்குமிட மெல்லாம் அன்பினைக் கண்டிட
பராசக்தியாம் அன்பைப் பற்றிடு இக்கணம்

பாவனையுடன் நீயுமடைக்கலமாகி விடு
பார்க்கலாம் உனக்குள் அற்புதக் கடவுளை
அன்பே தாஞய் அகத்துள் ஆன்மாவாய்
அம்மையை உணர சரண மடைந்திடப்பா

உனதறிவான உனது ஆன்மாவை
உனக்குள் நீ உணர உடனடியாக

இம்மையில் இக்கணமே உண்மையாக சரணடைவாய்
மாதாவின் அருளால் மாசற்ற உனதான்மா
சுயம் ஜோதியாய் சுத்தப் பிரம்மமாய்
அகத்துள் உணரலாம் நம்பிடுவாய் மனமே

இச் சகத்தையெலாம் அருட்குல மாக்கிடவும்
நல்லறிவாற்றலும் நலந்தரு ஞானமுடன்
பூரண மனிதனாய் புவனே நீஎனை ஆக்கி
பாக்கியத்தோடு பாரெல்லாம் புகழ்பெற

புனிதனாக்கி எனைப் பொலிவுறச் செய்குவாய்
வேதவேதாந்த வாழ்வும் வீரத்தோடறமும் ஈந்து
நல்ல நீதியோடருளும் தந்து
நன்நெறியில் எனை இருத்தி வைத்து

புத்தியில் அமைதியோடு அன்பெனும் அழகும் தந்து
அருட்குலமோங்கும் தொண்டை இடைவிடாதருளித்
தாயே
ஈதலில் இன்பம்தந்து இன்பத்தில் இறையருள் காட்டி
சாதலும் பிறப்பு மில்லா வரத்தையும் தந்திட்டென்னை

பூரண ப்ரம்மஞானம் பொருந்திய வாழ்வை யருளி
தான்தானய் நிலைத்திடவே நீ தந்திடம்மா
மனமே! கவசத்தை தினமுமோதி காயத்தை சுத்திசெய்து
கவசத்தை பொருள் உணர்ந்து கருத்தோடு ஓதிவிட்டால்

கள்ளம் கபடறுக்கும் காமக் கசடறுக்கும்
வினைப்பயனையும் விரட்டும் புவனேசி கவசம் நம்பு
பகுத்தறிவுள்ள சீடா பற்றிடடா கவசத்தை
கவசத்தை ஓதியும் நீ கலிதோஷ மகற்றிடடா

•

கவச பாராயணத்தால் கள்ளமில்லா வுள்ளமாகும்
கள்ளமில்லா வுள்ளத்தில் காணலாமே புவனையையும்
மனக்கோட்டை கட்டாமல் புதுக்கோட்டை வந்திடடா
புதுக்கோட்டையுள் நீயும் புவனேசி கண்டிடடா

பற்றிடடா புவனேசி பாதமதைப் பற்றிடடா
பற்றிவிட்டால் பற்றற்ற பரசுகமும் கிட்டிவிடும்
ஆனந்தமாகவே நீ அகத்துள் மாறிடுவாய்
அன்னையின் கவசத்தை அன்புடனே நெக்குருக

ஆசார நிஷ்டையுடன் அனுதினமும் ஒதுவீரேல்
அறம் பொருள் இன்பம் வீடு அனுக்ரஹித்தாட்
கொண்டிடுவள்
அதிசுலபமாகவேதான் அன்னையுமே மூன்னிற்பள்
மாதாவின் கவசமிதை மனமுருகி ஒதுவீரேல்

அஷ்ட லக்ஷ்மியும் அகலாதிருந்திடுவள்
மறவாது ஓதிட்டால் மஹராஜி அருளுண்டாம்
பொருளுண்டாம் மாதாவின் புண்ணிய லோகமுண்டு
ஆசார ஒழுக்கமுடன் அன்பு நேமநிஷ்டையுடன்

சிரத்தா பக்தியுடன் ஜகன்மாதா கவசமிதை
ஒருமனத்தோ டோதுவீரேல் மாபாவம் மறைவதுடன்
அன்புருவாம் அம்மையை அகத்துள் உணர்ந்திடலாம்
மாதாவும் முன்வந்து மஹத்தான வரமருள
சொன்னபடி செய்து நீ சுகமடைவாய் மனமேகேள்

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

**ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரம்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம், புதுக்கோட்டை-622 001**

அன்புடையீர் !

ஒரு ரூ 300, 400, 500 அல்லது அதற்கு மேற்பட்ட துகைகளையும் தங்கள் பெயரில் ''ஸ்ரீ புவனேச்வரி சாரிடீஸ் டிரஸ்ட், (ரிஜிஸ்டர்ட்) அதிஷ்டானம், கீழ 7-ம் வீதி, புதுக்கோட்டை'' என்ற விலாசத்தில் பாங்கில் நிரந்தரமான வைப்புத் தொகையாக வைத்து அதில் வரும் வருஷத்தின் வட்டித் தொகைகளை அதிஷ்டானத்தில் நடைபெற்றுவரும் ''க்ருஷ்ண யஜுர்வேத பாடசாலை பத்து பையன்களின் வருஷத்தின் ஒருநாள் உணவிற்கு'' என்று குறிப்பிட்டு ஸ்ரீ புவனேச்வரி சாரிடீஸ் டிரஸ்டின் காரியதரிசி அவர்கள் மேற்கண்ட தொகைகளின் வட்டியைமட்டில் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று, தாங்கள் மேற்கண்ட மூலதனத்தை யாராலும் எடுக்கமுடியாத சாஸ்வதமான வைப்புத் தொகை ஆக்கிவைத்து (Fixed Deposit) அதிஷ்டானத்தில் நடைபெற்றுவரும் வேத பாடசாலையைத் தாங்கள் நிரந்தரமாக நடத்திக் கொடுத்து வேதமாதாவின் திருவருளை சாஸ்வதமாக தாங்கள் பெற்றுய்ய வேண்டுமெனக் கோருகிறோம்.

ஸ்ரீ மத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்
ஆக்ஞைப்படி

**Dr. N. தியாகராஜன்** காரியதரிசி,
அதிஷ்டானம், புதுக்கோட்டை-622 001

ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளின்
அனுக்ரஹத்துடன்

ப்ரதி ஆங்கில மாதம் முதல் வெள்ளிக்கிழமை
வெளிவருகிறது

# ஸ்ரீ புவனேச்வரீ விஜயம்

(மாத இதழ்)

வெளியிடுவோர் :

ஸ்ரீ புவனேச்வரி சாரிடீஸ் டிரஸ்ட்,
ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரம்மேந்திர
ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம்
புதுக்கோட்டை—622 001

தனிப்ரதி 1-50

ஆண்டு சந்தா 15-00 பரம்பரை சந்தா 251-00
ஆயுள் சந்தா 151-00 போஷகர் 1001-00

மலேயா / பர்மா } ஆண்டு சந்தா { Sea Mail 40-00 / Air Mail 70-00

Just Published

# Adhishtanam and Three Avadhuta Saints

Price: Rs. 2-50 or One Malaysian Dollar

**அதிஷ்டானமும் அவதூதர் மூவரும்**

[தமிழ் பதிப்பு]

For copies write to :

ADHISHTANAM

Sri Bhuvaneswari Nagar, Pudukkottai-622001

OR

SRI SKANDASRAMAM

Udayapatti, Salem-636014

## எமது பிற வெளியீடுகள்

| | |
|---|---|
| ஸ்ரீ புவனேச்வரி அஷ்டோத்ரம் | —0-30 |
| ஸ்ரீ புவனேச்வரி கவசம் | —0-50 |
| ஸ்ரீ புவனேச்வரி பூஜாகல்பம் | —0-60 |
| ஸ்ரீ ஹனுமத்கவசம் | —0-60 |
| ஸ்ரீபஞ்சமுக ஆஞ்சநேயர் கவசம் | —0-50 |
| ஸ்ரீலக்ஷ்மிநரசிம்ம கராவலம்ப தோத்ரம் | —0-50 |
| ஸ்ரீவாராஹி அஷ்டகம் | —0-50 |
| தாயும் சேயும் | —0-50 |
| ஸ்ரீசூலினி துர்கா ஸ்தவம் | —0-50 |
| சதாசிவ மான்மியம் | —3-00 |
| ஸ்ரீஸ்கந்தகிரி மகாத்மியம் | —2-00 |
| வெள்ளிவிழா மலர் | —5-00 |
| Gospel of Swami Santananda | —2-00 |
| அதிஷ்டானமும் அவதூதர் மூவரும் | —3-00 |
| Adhishtanam and Three Avadhutha Saints | —2-50 |
| விநாயகர் அகவல் | —0-30 |
| ஸ்ரீஸ்கந்தகுருகவசம் | —0-30 |
| ஸ்ரீ புவனேஸ்வரி சுப்ரபாதம் & ஸ்ரீ புவனேஸ்வரி கவசம் | —2-00 |
| அருளுரை | —2-00 |

சர்மாஸ் சானடோரியம் ப்ரஸ், புதுக்கோட்டை-622 001